# காந்தி முதுமொழி வெண்பா.



இது
இராமநாதபுரம்
சேதுமன்னரவர்கள் ஆளுகைக்குட்பட்ட
செல்லூர்
செ. ரெ. இராமசாமி பிள்ளை
என்னும்
அணியடியனுர்
யாத்தது.

வெளியிட்டோர்
பாகனேரி
ஜவஹர்லால் வாசகசாலையார்.

# பெரியோரியல்பு.

உண்டா லம்ம இவ்வுலகம்; இந்திரர்
அமிழ்தம் இயைவது ஆயினும் இனிதெனத்
தமிய ருண்டலும் இலரே; முனிவிலர்;
துஞ்சலு மிலர்; பிறரஞ்சுவ தஞ்சிப்
புகழெனின் உயிருங் கொடுக்குவர்; பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர்; அயர்விலர்;
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே.

—புறம். ௧௮௨



# முன்னுரை.



உலகத்தில் அறநெறி சிதைந்து, மறநெறி வேரூன்றி வருங்காலத்து, ஒவ்வொரு பெரியார் நமது இந்திய நாட்டிற்றோன்றி, மறநெறிகளைந்து அறநெறியை வளர்க்கா நிற்பர்.

அவ்வாறே, இதுகாலை நமது இந்தியாவில் சாதி வேற்றுமை முதலியன பல்கி, அதன் விளைவாக மக்கட் பரப்பில் பலதிறப்பட்ட தீய எண்ணங்களும், வறுமைப் பெரும் பிணியும் அலைத்து வருத்தா நின்றன. அவைகளை அறவேயொழிக்க அன்பும் அருளுமே படைகளாகவும், உண்மையே மெய்க் கவசமாகவும் பொறுமையே அணிகலனாகவும் தாங்கி, எவ்வுயிருந் தம்முயிர்போற் கருதும் பேரளியாளராய், ஏழைகட் கெளியராய், நன்மைக்குறையுளாய்க், கற்றோர்க்கு மற்றோர்க்கு மினியராய், நவிறொறும் நூனயம்போற் பயிறொறும் பண்பும் பெருமையும் அளிப்பவராய், பகைவரும் பணியும் பான்மையுடையவராய், தீமை செய்வார்க்கு நன்மையே செய்பவராய்ப்பிறங்கும் 'செயற்கரிய செய்வார் பெரியர்' என்னும் பொய்யில் புலவர் பொருளுரைக் கிலக்காக விளங்குபவர் காந்தியடிகளொருவரேயாவர்.

இப்பெரியார்மீது யாதேனும் ஓர் நூல் செய்ய வேண்டுமென்னும் பேரவா எளியேற்கு மிக்கெழுந்தமையால் "காந்தி முதுமொழிவெண்பா" என்னும் இந்நூல் செய்யும்படி நேர்ந்தது.

இந்நூலின் முதலிரண்டடிகளில் அடிகள் இதுகாலை வளர்த்து வரூஉம் அறநெறிகளையே சுட்டி, அடிகளிடம் விளைவுவதாகவும் பின் இரண்டடிகளில் அடிகளே யிறையிறுப்பதாகவும் திருக்குறட் செய்யுளை யிணைத்திருக்கிறது.

எனவே, அடிகள் வளர்த்து வரூஉம் தூய்மை அறநெறி, திருக்குறட் பெருநாலுக்கு இயைந்து நிற்பது கண்கூடு.

எம்மொழியினும் திருக்குறள் போல் ஒருநூல் இருப்பதரிது என்பதொருதலை யாகலான் அடிகள் வளர்க்கும் அறநெறியும் திருக்குறளும் எக்காலத்தும், எத்தேசத்தும், எச்சமயத்தும் பொன்னே போற் போற்றும் பெருமை வாய்ந்தன.

ஆதலால் அடிகள் கொண்ட நெறியை யெல்லோரும் அறிந்து போற்றற்கும், திருக்குறட் பெருமையை நன்கறிந்து பயிறற்கும் ஏதுவாகத் திருக்குறளிற் காமத்துப்பால் நீக்கி, அறத்துப்பால், பொருட்பால் ஆகிய இரண்டு பாற்கும் அதிகாரம் நூற்றெட்டாகலான், ஒவ்வோரதிகாரத்திற்கும் ஒவ்வொரு குறள்

வெண்பாக்களைப் பின்னிரண்டடிகளாக இணைத்து நூற்றெட்டு வெண்பாக்கள் யாத்துள்ளேன்.

இந்நூற்கண் சொற்பொருள் வழுஉக்கள் மலிந்திருக்கலாம். இருப்பினும் உலகம் போற்றும் ஒருவராகிய காந்தியடிகள் பெருமையைக்கூறும் பெற்றியொன்றே நோக்கி மன்னித்து, இந்நூலை ஏற்றுக்கோடல், ஒவ்வொரு தமிழ் மக்களின் முதன்மையான கடமையென்பதை மிகவும் பணிவுடன்கூறி, அவ்வாறே செய்ய வேண்டுகிறேன்.

யாவும் நன்றேயாக

இங்ஙனம்,

ஆங்கிரச ஆண்டு
தைத் திங்கள்
உஅ ஆம் நாள்

செ. ரெ. இராமசாமி என்னும்,
அணியடியன்,
செல்லூர்.



# தமிழ்த்தாய் வணக்கம்.

—∞✥∞—

சிஃறாழிசைக் கோச்சகக்கலிப்பா.

அணியாருங் கடலினைச்சீ ராடையதாக் கொண்டினிய
மணியாரும் பூமகளின் முகமாக வயங்குகின்ற
மூவேந்தின் முதற்செழியன் முறைசெலுத்தப் பெருமையுறு
காவேந்து மலரின்மணங் கமழுகின்ற தென்னாட்டில்
ஒருபதினேழ் மொழிமகளி ரொக்கவந்து பணிசெய்யத்
திருவளர வளருகின்ற செந்தமிழா மெந்தாயே.

தரவு

வள்ளுவக்கம் மியன்செய்குறண் மணிமுடியைத் திருமுடியிற்
கொள்ளுபுகன் மணிமொழியார் கோவையணி கழுத்தணிந்து
உள்ளுபுகழ்ச் சாத்தனா ருளுற்றுமணி மேகலையைக்
கள்ளுலாம் பூங்கொடியிற் கவினுமிடை பூண்டனையே.

இளங்கோபல் சொன்மணியா லிழைத்தசிலம் படிசூடி
வளங்குலவு பலநூலா மாட்சியுறு மணியணிந்து
இளந்தமிழும் பாரதியார் பாமாலை இனிதேற்று
விளங்குபுகழ் பலநிறீஇ மேன்மையினாற் பொலிந்தனையே.

வந்தேயாதரம்.

புகழ்கலிக்குங் கலித்தொகையாம் புதுமைமுர சடிப்பி
[த்தே
இகழ்வளரு மறுபுலச்சொ லேந்திழையார் புறங் கொ
[ப்
முகிழ்நகைவெண் முத்தரும்ப வகம்புறமுந் தனித்
[தனிபே
மகிழ்மிகுத்தைந் துறைவிரித்து பாண் புறமுன் வளர்ந்
[தனை பே

தாழிசை

ஆங்கு

(தனிச்சொல்)

பன்னரும் பெருமை துன்னிய தமிழாம்
அன்னை யேநின தடிமலர் பழிச்சுதும்
உன்னரு மறிவா மொளிபெறற் பொருட்டே.

சுரிதகம்



உ

வந்தேமாதரம்

# காந்தி முதுமொழி வெண்பா.

## கடவுள் வணக்கம்.

நேரிசை வெண்பா.

சீரேறு தண்மை தெளிவு நுணுக்கமதிற்
பேரேறு காந்திப் பெருமாற்கு—நேராம்
முதுமொழி வெண்பா மொழிய வருளும்
எதுவுந்தா ஞண இறை.

## நூல்

கடவுளென்ப தொன்றிலெனத் தானே கரைவார்க்
குடனே யுளனென்னை காந்தீ—திடமாய்
அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. ௧

எல்லார்க்கு நன்மை யிழைப்பதே மிக்கதென்று
சொல்லாற் செயலாற் றுணிந்ததென்—நல்காந்தி
துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை. ௨

நல்லார்க்கும் பொல்லார்க்கு நன்மை மிகச்செய்தே
இல்லாண்மை யாக்கியதென் காந்தியே — வல்ல
செயற்கறிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். ௩

இந்திய வேலையருக் கென்று முழைப்பதென்ற
நந்தலறு நற்கோனென் காந்தியே—முந்தச்
சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு. ௪

கற்புநிறை கஸ்தூரி யம்மையொடு பன்னாளும்
பொற்புறுமிற் பூண்டதென்கொல் காந்தியே!—அற்பின்
அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன். ௫

பெண்மை யுலகே பெரிதென்றெக் காலத்தும்
உண்மையா யோதுவதென் காந்தியே! — தண்மையார்
பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். ௬

நின்னைப் புரையுநிலை நேர்தேவ தாசனையே
பின்னைமக னாப்பெற்றாய் காந்தியே! — முன்னையே
தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது. ௭

மக்களிடைப் பூச லிகழின்மனந் தாழாதே
ஒக்கவுண்ணா நோன்புறலென் காந்தியே! — தக்கவோர்

அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு. அ

தீண்டாமை நீக்கிச் சிறப்பாய்ப் பகுத்துண்டல்
காண்டலே நன்மையென்றை காந்தியே!—தாண்டா
வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று. கூ

துன்பமிகச் செய்தா ரிடத்துநீ தாயின்சொல்
இன்பி னியம்புவதென் காந்தியே!—அன்பனே
துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉ மின்சொ லவர்க்கு. க0

ஆங்கில மன்ன ரடுபோர்க் குதவிசெய்தே
இங்கிப் பகையென்னே காந்தியே!—ஒளங்கினிய
எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லைச்
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. கக

குற்றவா னென்று முறைமன்றி னிற்கூஉயி
உற்றதுரை யென்னவொளி யாதுரைத்தாய்—முற்
காந்தி!
சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
உட்கோட்ட மின்மை பெறின். கஉ

கற்ற விழியே கருத்தடக்கி மன்பதைக்கும்
அற்றை யறைவதென்னே காந்தியே!—முற்ற
அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
ஆரிரு ளுய்த்து விடும். கந

மன்னர் களுமொழுக்க மாண்பு திறம்பவரின்
முன்னர் மொழிந்து முறைப்படுத்தல்—என்காந்தி!
நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்கம்
என்று மிடும்பை தரும். கச

மேனாடு சென்றுநீ வேற்றுப்பெண் வேண்டாமல்
தாய்நாடு போந்ததென் றண்காந்தி!—நாளும்
பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில். கரு

தென்னைப் பிரிக்காச் சிறைநண்ணிக் கல்லுடைத்து
மன்னுத பல்வீயும் வாரினைநீ—என்காந்தி
இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. கசு

கல்விசெல்வங் கைத்தொழிலிற் கைதேரு மேனாட்டார்
பல்வள னுங் கண்டுபொறு பண்பென்னை—சொல்காந்தி!
அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். கஎ

காணிக்கை யாகக் கருதிமக்க டந்தபொருள்
பேணிக் கதர்நிதிக்குப் பேர்த்ததென்—மாண்காந்தி!
சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். கஅ

கண்டக்கா லொன்றும்பிற் காணுக்கா லொன்றுமே
கொண்டுமொழி யாக்கோளென் காந்தியே!—பண்
[டையே

கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல். ககூ

உலக மக்க டங்கட் குரைப்பன வெல்லாமும்
பலபயனைப் பற்றியதென் காந்தி!—அலகில்
பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். உ0

ஆங்கில மக்களினக் கல்ல லிழைப்பவுநீ
தேங்குதுன்பு செய்யாதென் சீர்க்காந்தி!—ஓங்கு
அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல். உக

அருளொன்றே பற்றி யதன்பயனைப் பற்றா
மருளென்னை கூறுகமாண் காந்தி!—இருண்மிகு
கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு. உஉ

இந்திய வேழைமக்கட் கின்பப் பணிசெய்ய
நுந்தமுடலைக்கொடுத்தாய் நண்காந்தி!—நந்தும்
வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. உங

ஈர்சுடருங் கார்கோளு மேலியற்கை மாறினுநின்
பேர்மாறாப் பெற்றியென்னே பேர்க்காந்தி!—சீராகத்
தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று. உச

செல்வப் பெருங்குன்றைச் சீருளென் சிற்றுளியாற்
கல்வி யெறிந்தெதன்னை காந்தியே!—நல்ல
அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்
பூரியார் கண்ணு முள. [வம்

கல்விக் கடல்கடக்கக் கப்பல்வழி மேனாடு
செலீஇயுமுன் றின்றுதேன் காந்தியே!— பொல்லா
[நோய்த்
தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙன மாளு மருள். உசு

சிறைக்கோட்டம் புக்குச் சிறந்த தவத்தால்
இறைக்கோட்ட நீக்குவதென் காந்தி!—மறைக்கோட்
உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை[டம்
அற்றே தவத்திற் குரு. உஎ

காவித் துணியுடாக் கண்காண் கதிராடை
மேவியுடுத் தில்வாழ்வென்னின்காந்தி!—தாவியே
நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில். உஅ

பிறர்பொருளைப் பார்த்தாற் பேய்க்கண்டாற் போல
உறுநடுக்க முண்டனைநீ காந்தி!—அறவேதான்
உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கொள்வே மெனல். உகூ

மெய்ம்மையன்று வேறு விளம்பா தறமுரைக்குஞ்
செம்மையென்ன காந்தி சிறிதுரைத்தி! — அம்மையுழ்

யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற. ௩0

துன்ப மிகச்செய்த தூவெள்ளை யர்மீதும்
வெம்பலின்றி நீயிருந்தாய் விள்காந்தி!—நம்பியே
தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம். ௩௧

ஆக்கன்று நோயா லயர மருந்தூட்டிப்
போக்கலுயிர் சால்போ புகல்காந்தி!—மீக்கூர்
அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தன்னோய்போற் போற்றாக் கடை. ௩௨

பாம்புபல நின்னிருக்கை யுள்ளே படர்ந்துழலத்
தாம்புடைத்துக் கொல்லாத தண்மையென்னை—ஆங்
தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி [காந்தி!
தின்னுயிர் நீக்கும் வினை. ௩௩

செல்வமெல்லா நீத்துத்தண் செம்மை யுறுமெளிய
நல்வாழ்க்கை கொண்டதென்னை நங்காந்தி!—சொல்
அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றால் [வல்கேள்
அற்குப வாங்கே செயல். ௩௪

கதிராடை யொன்றுடுத்துக் கம்பொன்று மூன்றி
ஏதிரொன்றும் வேண்டா வியல்பென்—முதிர்காந்தி!
மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க் குடம்பு மிகை. ௩௫

உண்மை நிலையென்று மோர்விளக்கைத் தான்கொண்
திண்மையறி யாமையிருள் சீத்தலேன்—வண்காந்தி!
ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு. ௫௬

மக்களெல்லா நன்மைமிக வாழ்தல் விரும்பலன்றி
மிக்கதொன் றுங்கொள்ளா விறலென்னை—அக்காந்தி!
வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில். ௫௭

வழக்கறிஞ னாகித்தென் னாப்பிரிக்காச் சென்று
சழக்கென்றந் நீக்கேழைச் சார்பென்—விளல்காந்தி!
ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும். ௫௮

உப்பு வரிச்சுமையென் றெவ்வாக் கொடுஞ்சட்டந்
தப்பெனவே மீறியதென் சால்காந்தி!—இப்பூ
முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும். ௫௯

மேனா டடைந்து விழுப்பமிகு கல்விகற்று
வானாடு நன்னெறிசேர் மாக்காந்தி!—ஏனுஞ்சொல்
கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக. ௬௦

வல்லபாய் மாளவியா மாண்பார் சவகர்லால்
நல்ல சரோசனியார் நண்பென்னை—சொல்காந்தி!

மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு. ௪௧

பலவற்றி னைதபடித்தும் பாரக் குறளை
மிகக்கேட்டு நீயகிழல் வின்னாய்—தகைக்காந்தி!
கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை. ௪௨

குண்டு மழைபொழியுங் கொற்றவனஞ் செல்வஞ்சு
ரண்டு கொடுமையஞ்சாக் கூறுவதேன்—வண்காந்தி!
அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில். ௪௩

நல்லொழுக்கே நண்பாய் நவையே பெரும்பகையாய்ப்
புல்லலென்னை காந்தி! புகலுதி—மெல்லத்
தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார். ௪௪

பொன்னும் பிறவும் விழையா துலகத்தில்
மன்னுமறி ஞர்நட்டாய் மாண்காந்தி!—துன்னுஞ்சீர்த்
தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில். ௪௫

செல்வர் பலரிருப்பச் சோராது கையிராட்டைப்
புல்லுமக்கள் பாற்சேறி பொற்காந்தி!—நல்ல
மனத்தானு மாந்தர்க் குணர்ச்சி யினத்தானும்
இன்னா னெனப்படுஞ் சொல். ௪௬

எர்தாச் சிறையி லிருந்திருந்து பன்னாளுங்
கர்தாப் பிறபொருளைக் காய்ந்தென்—அருங்காந்தி!
ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
ஊக்கா ரறிவுடை யார். ௪௭

வாள்வலியிற் றோள்வலியின் மாண்பாரும் வெள்ளை
[யரைக்
கோளுண்மை யால்வேறல் கூடுமென்றாய்—ஆள்காந்தி!
ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில். ௪அ

வெள்ளையர்தந் நாட்டு மிகுபொருளை யிங்குவிற்றே
கொள்ளைகொள வின்னே கொளோமென்றாய்—வின்
கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன் [காந்தி
குத்தொக்க சீர்த்த விடத்து. ௪௯

இந்தியநாட் டிற்பொருளை யேற்றுமதி செய்யவிட்டுப்
பிந்தித் துணிமறித்தென் பேர்க்காந்தி!—முந்தித்
தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்னல் லது. ௫0

அயனாட்டுப் பெண்ணா மருமைச் சிலேட்டை
இயனாட்டு மாணவியா யேற்றாய்—உயர்காந்தி!
தேறற்க யாரையுந் தோராது தேர்ந்தபிற்
றேறுக தேறும் பொருள். ௫௧

மாண்பாரு நின்னலுவல் வாய்ப்பமகா தேசாயை
நாண்பா யமைத்ததென்னை நங்காந்தி!—ஆண்பால்

வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
அதற்குரிய னாகச் செயல். ௫௨

பழந்தமிழ ராய பறையருட னுண்பின்
இழிந்தகண்பு கூடுமென்று மென்னை—மொழிகாந்தி!
காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள. ௫௩

இரவினிலு மிர்வினுட னேற்றவுரை யாடிக்
காவின்றி நூனூற்றாய் காந்திப்—பெரியாய்!
அரியவொன் றுகாத வில்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின். ௫௪

குடிகளுக்கு நல்லனவே செய்க வெனவே
முடிமன்ன ருக்குரைத்தாய் காந்தி!—மிடிதீர
வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி. ௫௫

மக்க ளுரிமையினை மாற்றுகின்ற சட்டத்தைத்
தக்கவில்லென் றேமறுத்தல் சாலுமோ—அக்காந்தி!
நாடொறு நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறு நாடு கெடும். ௫௬

உலகினிலே போரே யுதவா தெனவே
பலவுல குக்கும் பகர்ந்தாய்—நலகாந்தி!
கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை. ௫௭

சிலநண்ப ரோடு சேர்ந்துபுலா லுண்டு
விலகலென்னை காந்தி விளம்பு—பலகாற்
பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். ௫௮

இந்தியா விற்செல்வ ரெல்லாம் பலவிருப்ப
நந்தலிங்கி லாந்தவைநீ நண்ணியதென்—கந்தி
துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்த்
தென்செயினுஞ் சோர்வில தொற்று. ௫௯

எங்கணுங்கை ராட்டை யியங்கின் வறுமை யினைத்
தங்க விடாமற் றடுப்பமென்றாய்—எங்காந்தி
ஆக்க மதர்விணாய்ச் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுரை. ௬௦

சட்ட மறுப்புத் தனியியக்க நீகொளீஇ
விட்டுவிடா தூக்கினையென் மேற்காந்தி!—கெட்ட
மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும். ௬௧

உப்பு வரிமுதலா வொவ்வாக் கொடுவரியைக்
கைப்புவரி யிற்கடிதல் காந்தியே!—ஒப்புமோ
தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு. ௬௨

சிறையிற் பலவிடும்பை சேரினுநீ நூனூற்
றுறைதலென்னை காந்தி! யுரைத்தி—குறைவில்

இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர். ௬௩

தகவில்லாச் சட்டந் தவிரென் றமைச்சர்க்
ககங்கொண் முடங் கல்லளித்தா யன்பின்—மிகுகாந்தி!
வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு. ௬௪

திருவாம்பற் பூவிற் சிறந்தநின் றன் வாய்ச்சொல்
ஒருவுலகோ யாண்டுமொப்ப வோதும்—பெருங்காந்தி!
கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல். ௬௫

உண்மையாய் நாட்டுக் குரிமைநல்கு முன்னெறியை
எண்மை யெனவுரைத்தா ரீங்குசிலர்—வண்காந்தி!
இன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை. ௬௬

நின்மொழியைக் கேட்டுனாற்றி னோரா சுயராஜ்யம்
என்னப் பலரிகழ வேற்காதென்—முன்காந்தி!
சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல். ௬௭

காந்திப் பெரியாய்நீ கண்ணும் வினையெவையும்
ஆந்தப்புச் சற்றுமின்றி யாக்கலென்னை—ஆந்துணையும்
தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. ௬௮

பட்டம் பலவும் படைத்தசெல்வர் மிக்கிருப்ப
விட்டதென் றா தாகநின்னை வின்காந்தி!—முட்டலண்
[டன்
அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூ துரைப்பான் பண்பு. சுசு

மன்னன்வழி நின்றுநின் வாய்மை மொழிகேட்டும்
சொன்னமொழி யன்றிமற்றுச் சொற்றிலையே—என்
வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றும் [காந்தி!
கேட்பினுஞ் சொல்லா விடல். எ0

மக்கட் குழுபலவாய் வைகநீ யெப்போழ்தும்
மிக்க குறிப்பறிந்து மேலுறைத்தாய்—நற்காந்தி!
கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி. எக

அவைப்புடைமே சொற்பொழி வாற்றி னவைமக்கள்
சுவைப்பொருளிற் பற்றுதலென் காந்தி!—நுவல்க
அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர். எஉ

அவையினைநீ கண்டா லறிவயர்ந்தாய் முன்பு
நவைநீத்துச் செஞ்சொலநீ யானாய்—செவைக்காந்தி!
வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை யஞ்சு பவர்க்கு. எ௩

வெள்ளை நிறமன்ன ரானின் வெருவருமோ
உள்ளமக்க ளானினல மோங்குமோ—வின்காந்தி!

ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை யில்லாத நாடு. எச

தொண்டர்படை யாமரணைச் சுற்றவிட்டு நின்னலக்
[கோள்
எண்டகாநா டும்முவப்ப வீர்த்தனையென்—தண்காந்தி!
முற்றுற்றி முற்றி யவரையும் பற்றுற்றிப்
பற்றியார் வெல்வ தரண். எரு

செல்வத்தை யீட்டுஞ் செவ்வழியை யிந்தியர்க்குப்
பல்வழியிற் கூறலென்னை பார்க்காந்தி!—நல்ல
பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள். எசு

உன்மொழிக்கீழ் வாழ்தொண்ட ருண்மைப் படைக
[ளைத்தீ
மன்னனுவ லார்புடைப்ப மாறுதென்—இன்காந்தி!
கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை. எஎ

மாவும் வளைத்தடியுங் கொண்டுமன்னர் துன்புறுத்த
யாவுநல மென்பதொண்டர் நங்காந்தி!—மேவும்
விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து. எஅ

சவகர்லால் போன்ற தலைவர்க டம்மோ
டுவர்ப்பின்றி யொட்டலென்னை காந்தி!—எவர்க்கும்

செயற்குரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்குரிய யாவுள காப்பு. ௭௯

நன்மைக்கெழூஉ மக்களினை நண்புகொளப் பன்னாணி
வன்மையோ டாய்தலென்னை மாண்காந்தி!—தன்மை
நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின் [யாய்
வீடில்லை நட்பாள் பவர்க்கு. ௮0

அலித்துணைவர் நின்னி னகன்று மவரை
வலித்துநட்பாக் கோடலேன் வண்மை—யலிகாந்தி!
பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின். ௮௧

பெருந்தகைமை யாளர்நட்பைப் பேணுதலே யல்லாற்
றிருந்தாதார் கேண்மையினைச் சேரா—தொரூஉகாந்தி!
செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலி னெய்தாமை நன்று. ௮௨

என்றுமிங்கி லாந்தினவை யீயாது நன்மையென
அன்றுரைத்தா யென்னை யறைகாந்தி!—நன்றாய்த்
தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மன்னார்
அழுதகண் ணீரு மனைத்து. ௮௩

கற்றுத் துறைபோன தன்மை கழறலன்றி
மற்றுப் புகலாதென் மாக்காந்தி!—எற்றைக்கும்
ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில். ௮௪

ஓராடை யன்றி யுலகப் பொருணச்சுங்
காராடை கட்டாதென் காந்தியே!—போரா
அறிவின்மை யின்மையு மின்மை பிறிதின்மை
இன்மையா வையா துலகு. ௮௫

போற்றா ரையுநண்பாய்ப் போற்ற லுனக்கன்றி
வேற்றா ரிடத்துமிலை யிக்காந்தி!—மேற்றார்
இகலானா மின்னாத வெல்லா நகலானாம்
நன்னய மென்னுஞ் செருக்கு. ௮௬

பன்னார் பெரும்பகையை மாண்பெனவே நீகொண்டு
நன்னார்ச் சிறைக்கோட்ட நண்ணலென்—கொன்
அஞ்ச மறியா னமைவில னீகலான் [காந்தி!
தஞ்ச மெளியன் பகைக்கு. ௮௭

அடித்தாலும் வேந்த ரவளவு மெற்குப்
பிடித்தமெனப் பேசலென்னீ காந்தி!—வெடித்த
பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கட் டங்கிற் றுலகு. ௮௮

அன்பினர் போற்கூடி யல்லனவே செய்வாரின்
தன்புணர்ச்சி யாகா தெனக்கொண்டாய்—முன்காந்தி!
செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
உட்பகை யுற்ற குடி. ௮௯

நல்லாரைச் சார்ந்து நவைகெடுத்து வாழுதலே
எல்லார்க்கு மேற்ற வியல்பென்றாய்—சொல்காந்தி!

ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து விடும். ௧௦

எம்மம்மை கஸ்தூரி யேவற் பணிசெய்தே
உம்பனைப்போல் வாழுதலென் ஜோகாந்தி!—இம்மையிற்
பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னுறுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து. ௧௧

தந்நெறிப் பெண்டிர் தனியுரிமை யோங்கியுநீ
புன்னெறியிற் சேறப் புகழென்னே—உன்காந்தி!
ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு ௧௨

கள்ளுப் பகருங் கடையை மறியல்செய்து
தள்ளுதலென் காந்தி! நீ சாற்றுமதி—உள்ளுங்கால்
துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். ௧௩

பிறன்பொருளைக் கோடல் பெரிதும் பிழையென்
றறனுரைத்தாய் காந்தியெனு மைய!—திறமார்
உடைசெல்வ முண்ணெறி கல்வியென் றைந்துப்
அடையாவா மாயங் கொளின். ௧௪

பேரிச்சங் காயுப்பிற் பெற்றவெள் ளாட்டுப்பாலும்
ஓரிச்சை யாயுண்மை யொண்காந்தி!—பாரிற்செய்
மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை யுயிர்க்கு. ௧௫

வறியரிடத் தன்பு மகிழ்ச்சியுமீக் கூர்தல்
அறியவென்னீ காந்தி! யறைமோ—முறிவில்
நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு. ௯௬

துன்பம் பலவுழந்த போழ்துநீ தூய்மைநெறி
பின்புறாப் பெற்றியென்னே பேர்க்காந்தி!—முன்பு
தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை. ௯௭

மெய்ப்பையு மின்றிநீ வேந்தவைக்குச் செல்லுதல்
ஒப்புமோ காந்தி! யுரைக்குதி—இப்புவியில்
மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல்லவர். ௯௮

உலகமுழு துங்காந்தி காந்தியென் றோராப்
பலநலமும் பற்றலென்ன காந்தி!—அலகில்
கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு. ௯௯

மூக்கொடுகண் வாயு முடக்க னடக்கலுமே
ஆக்குமக்க ளில்லொருவ னாகுநீ—சீர்க்காந்தி!
பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன். ௧௦௦

உணவின்றி வாடு முலகமக்கட் குள்ளீர்
பணமுதவு மென்பதென்னே காந்தி!—பிணம்போல

அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றா டமியண்மூத் தற்று. க0க

பாஞ்சாலத் தின்முன்பு பட்டகொலை ஐயையெண்ணி
அஞ்சான் மனநாண லென்காந்தி! — நீஞ்சார்
பிறர்நாணத் தக்கது தானாணா னாயின்
அறநாணத் தக்க துடைத்து. க0உ

புத்திரி யம்மைகாஞ் சந்திரர்பு தல்வனென
எத்திகையு மூற்போற்ற லென்காந்தி! — புத்தறிவின்
ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டின்
நீள்வினையா னீளுங் குடி. க0௩

சீரா ருழவுடனே சேர்வா ணிகம்பேணும்
ஏராருங் கைத்தொழின்மே லேன்காந்தி! — போரார்
பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர். க0௪

சோறின்றிச் சோருந் துன்பமுறு மக்கட்
காறின்று நானூற்பே யாங்காந்தி! — கூறியதென்
நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும். க0ரு

நாட்டுத் தொழில்பாவ நாணா திரந்திரந்து
வேட்டுப் பொருள் கொண்டாய் வேள்காந்தி! — கேட்டுக்
கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேள ருடைத்து. க0சா

ஏற்பின் வருபொருளை யெட்டுணையுங் கொள்ளாது
சாற்பிற் கதர்நிதிக்குத் தந்ததென்—மாற்காந்தி
தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில். கoஎ

பிறப்பிறப் பற்ற பெரியோ னடிக்கீழ்
மறப்பின்றி நெஞ்சை மறித்தாய்—அறக்காந்தி
சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ். கoஅ

காந்தி முதுமொழி வெண்பா
முற்றிற்று.

நலம்.



